REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 5569

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்..அண்ணதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: கார்த்திகை 16உ புதன் (1—12—54) ★ ★ வெளியூர்: கார்த்திகை 17உ வியாழன் (2—12—54) [இதழ் 146

## நடுத் தெருவில் முத்தமிட்டார்களாம்!

வடக்கு மலேயாவைச் சேர்ந்த முஸ்லிம் ஒருவரும், அவரது மனைவியாரும் நடுத் தெருவில் கட்டியணைத்து முத்தமிட்டமைக்காக நீதிமன்றத்தில் அவர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டதாம்.

இந்த வழக்கை விசாரணை செய்த கோடா மாஜிஸ்திரேட், "நீங்கள் முஸ்லிம்களானதால், பொது இடத்தில் கட்டியணைத்துக் கொள்வதினின்றும் தடுக்கப்பட்டிருக்கிறீர்கள்" என்று குறிப்பிட்டு, அவர்களை எச்சரித்து விடுதலை செய்தார்.

சாத், பயன் என்ற பெயருடைய அத்தம்பதிகள் இருட்டிய பின்னர் அலோர்ஸ்டார் என்னுமிடத்தில் முத்தமிட்டுக்கொண்டிருந்தனர் என்றும், அதைப் போலீஸ்காரர் ஒருவர் பார்த்து விட்டதாகவும் தெரிகிறது.

# 'கடன் ஒத்திவைப்புச் சட்டம் குறைபாடுள்ளது'

## 'அதன் தீய விளைவுகளை அலட்சியப்படுத்தக் கூடாது'

### 'சட்டத்தை நீடிப்பதினால் உண்மை நிவாரணம் ஏற்படாது'

### கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பில் சட்டசபை எதிர்க் கட்சித் தலைவர் தகவல்

"கடன் ஒத்திவைப்புச் சட்டம் குறைபாடுகள் உடையது என்ருலுங்கூட, கடன்பட்டுள்ள விவசாயிகளுள் பெரும்பாலானோர், குறிப்பாக சிறிய நிலம் படைத்தவர்கள், குத்தகைதார்கள் ஆகியோர், தாங்கள் பட்டுள்ள கடன், கெடுபிடியாக வசூலிக்கப்படுவதினின்றும், இச்சட்டத்தினுல் பாதுகாக்கப்பட்டிருக்கிருர்கள்.

"அதே நேரத்தில், இந்தக் கடன் ஒத்திவைப்புச் சட்டத்தில் உள்ள தீய விளைவுகளையும் அலட்சியப்படுத்திவிடக் கூடாது.

"எனவே, விவசாயிகளுக்கு உண்மையான நிவாரணம் தரப்பட வேண்டும் எனும் நோக்குடன் இப்பிரச்சினையை அணுகுவதானுல், இப்போதுள்ள கடன் ஒத்திவைப்புச் சட்டத்தை நீடிப்பதினுல் மட்டும் அந்நோக்கம் நிறைவேருது.

"அம்மாதிரி சட்டத்தை நீடிப்பதானது, இப்போதுள்ள நிலையற்ற தன்மையை வளர்க்கத்தான் உதவும்.

"கடன் கொடுப்பவர்கள், கடன் வாங்குபவர்கள் ஆகிய இரு சாராரின் நன்மை கருதியும் இந்த நிலையற்ற தன்மைக்கு முடிவு கட்ட வேண்டும்; ஆகவே, இப்போதுள்ள நிலைகளுக்கொப்ப ஒரு விரிவான சட்டம் இயற்ற வேண்டும்.

"கடன் வசூலிப்பதில் கெடுபிடி நடவடிக்கைகளைத் தடுக்கவும், கடன் அளவைக் குறைக்கவும், அநியாய வட்டி விதிப்பு போன்றவற்றை களைந்து குறைக்கப்படும் கடன் தொகையைச் சுலபமான தவணைகளில் திருப்பித் தருவதற்குமான வழிவகைகளை அந்த விரிவான சட்டம் கொண்டிருக்க வேண்டும்.

"அப்படியொரு விரிவான சட்டம் இயற்றுவதற்குத் தேவைப்படும் குறைந்த கால அளவு வரையிலும், இப்பொழுதுள்ள கடன் ஒத்திவைப்புச் சட்டம் நீடிக்கப்பட வேண்டும்."

இந்தக் கருத்துக்களடங்கிய அறிக்கை ஒன்றை கம்யூனிஸ்டு கட்சி சார்பில் தோழர் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ., முதன் மந்திரி காமராசரிடம், கடந்த நவம்பர் 26-ந் தேதியன்று தந்துள்ளார் எனத் தெரிகிறது.

## யூ-நூ — ஹோசி-மின் சந்திப்பு

ஹாங்காங், நவ. 30—

பர்மியப் பிரதமர் யூ-நூ-வும், வியட்மின் பிரதமர் ஹோசி-மினும் சந்தித்து பொதுப்படையான செய்திகள் பற்றிப் பேசியதாகத் தெரிகிறது.

இவர்கள் சந்திப்பிற்குப் பின்னர் கூட்டறிக்கை ஒன்று வெளியிடப்பட்டிருக்கிறது.

தென்கிழக்கு ஆசியாவில் அமைதி ஏற்படுத்துவது பற்றியும், இந்தோ - சீன நாடுகளிடையே நட்புறவு வளர்க்கவும் ஆவன செய்வது பற்றிப் பேசினுர்கள் என்று தெரிகிறது.

## இராதா இராமாயணத்தின் முன் சண்டித்தனம்!

### 'பக்தர்'களின் மனம் நோகிறதாம்

### 'மறியல்' நடத்தப் போவதாக இந்து மத 'பாதுகாவலர்'கள் கொக்கரிப்பு

மதுரை, நவ. 30—

மதுரையில் தோழர் எம். ஆர். இராதா குழுவினர், டிசம்பர் 2-ல், 'இராமாயண' நாடகம் நடத்தும்போது, அந்த நாடகத்திற்குச் செல்லும் மக்களை, நாடகம் பார்க்கக்கூடாதென மறியல் செய்வதற்காக மதுரை, திருச்சி ஆகிய இடங்களில் 'தொண்டர்'கள் சேர்க்கப்பட்டு வருகின்றனராம். இந்த 'மறியல்', 'அமைதி'யாகவே நடைபெறுமாம்.

இந்தத் தகவலை திருச்சி இந்து மதச் சங்கத்தைச் சேர்ந்த மகாலிங்க அய்யர் வெளியிட்டுள்ளாராம்.

இந்து மதத்தவரைப் புண்படுத்தும் வகையில் நடைபெறும் இந்த நாடகத்தை எதிர்த்துக் குரல் எழுப்புவதற்காக, துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்படுவதுடன், கண்டன ஊர்வலங்களும் அன்றைய தினம் நடத்தப்படுமாம்.

கோவில்களில் உள்ள 'சாமி' சிலைகள், ஆபரணங்கள், கோவில் சொத்துக்கள் இவற்றைப் பாதுகாப்பது பற்றி ஆலோசிக்க இந்து மத 'பக்தர்'களின் மாநாடொன்றும் கூட்டப்பட இருக்கிறதாம்.

கோவில்களைப் பாதுகாக்க, இளம் தொண்டர்கள் நியமிக்கப்படுவார்களாம்.

மதுரை நகரில் இப்போது பலத்த போலீஸ் பந்தோபஸ்து ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாம்.

தென்ஆப்பிரிக்காவை ஒரு குடியரசு நாடாக ஆக்குவதே தேசியக் கட்சியின் லட்சியம் என்று தென் ஆப்பிரிக்காவின் புதிய பிரதமர் ஒரு கூட்டத்தில் கூறினுர் எனத் தெரிகிறது!

## காமராசர் வரவேற்பில் தி. மு. க. கலக்கவில்லை

### 'தினத் தந்தி' பொய்ச் செய்திக்கு மறுப்பு

"புதுவையில் சென்னை முதன் மந்திரி காமராசர் அவர்கட்கு தி. மு. கழகம் வரவேற்பு வாசித்தளித்ததாக 30-11-54 'தினத் தந்தி' இதழில் வெளி வந்துள்ள செய்தி தவருகும்; காமராசர் அவர்கட்கு திராவிட முன்னேற்றக் கழகம் வரவேற்பளிக்கவுமில்லை; எந்த வரவேற்பிலும் கலந்துகொள்ளவுமில்லை.

'திராவிடர் முன்னணி'யினரால் ஓர் வரவேற்பு நடைபெற்றது. அதையே தி. மு. கழகம் நடத்தியதாக 'தினத் தந்தி' கூறுகிறது.

திராவிட முன்னணிக்கும், தி. மு. கழகத்திற்கும் எவ்விதத் தொடர்போ, சம்மந்தமோ கிடையாது என்பதை இதன் மூலம் அறிவிக்கின்றேன்.

'திராவிடர் முன்னணி'யினர், தி. மு. கழகக் கொடியை அன்றைய வரவேற்பில் பயன்படுத்திக் கொண்டதின் விளைவே இத்தவறுக்குக் காரணமாகும்," என்று, புதுவை தி. மு. கழகச் செயலாளர் தோழர் ச. சிவப்பிரகாசம் அறிவிக்கிருர்.

## இந்தியாவிற்கு ரூ. 250 கோடி கடன்

### பாகிஸ்தான் தர வேண்டுமாம்!

பாகிஸ்தான் அரசாங்கம் இந்தியாவிற்கு ரூ. 250 கோடி கடன் கொடுக்க வேண்டியுள்ளதாம். இதுவரையில் கடன் தொகையில் சிறிதும் இந்தியாவிற்குத் தரப்படவில்லை.

இந்தக் கடன் பாகிஸ்தான் நாட்டுப் பிரிவினையின் விளைவாம். இத்தகவலை உதவி நிதி மந்திரி ஏ. ஸி. குஹா மக்கள் சபையில் வெளியிட்டிருக்கிருர்.

## விடுதலை!

புதுடில்லி, நவ. 30—

ஆந்திராவில் முன்னுள் மரமேறிகள் நடத்திய அறப்போராட்டத்தின்போது தண்டிக்கப்பட்ட எல்லோரையும் விடுதலை செய்ய ஆந்திர கவர்னர் உத்திரவிட்டுள்ளதாக பிரதமர் நேரு மக்கள்சபையில் அறிவித்திருக்கிருர்.

அறப்போராட்டம் நிறுத்தப்பட்டுள்ளதால், மேற்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டதாக கவர்னர் தம்மிடம் கூறியுள்ளார் என பண்டிதர் தகவல் அறிவித்துள்ளாராம்.

## 62 மக்கள் சபை உறுப்பினர்கள் யோகாசனப் பயிற்சி பெறுகின்றனர்

### உதவி சபாநாயகரும் முன்நிற்கிருராம்!

மக்கள் சபையில் தகவல்கள்

புதுடில்லி, நவ. 30—

மக்கள் சபையின் உதவி சபாநாயகர் உள்ளிட்ட 62 அங்கத்தினர்கள், யோகாசனப் பயிற்சி பெற்றுவருவதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தத் தகவலை, என். கேசவ அய்யங்கார் என்பவர் வெளியிட்டுள்ளார்.

"மக்கள் சபை அங்கத்தினர்களுக்கும் பயிற்சி தரும் நிறுவனம் உட்பட யோகாசனப் பயிற்சி நிலையங்களுக்கு சர்க்கார் பொருளுதவி செய்யுமா?" என்று பாபுராம் நாராயண் சிங் என்பவர் கேட்டார்.

"யோகாசனம் பற்றிய ஆராய்ச்சிக்கு மட்டுமே சர்க்கார் மானியம் உதவும்; யோகாசனப் பயிற்சி பெறுவதற்குப் பண உதவி செய்யாது,"

என்று, பலத்த சிரிப்பொலிக்கிடையே, கல்வி மந்திரியின் காரியதரிசி அறிவித்தார்.

பாபுராம் நாராயண், 'சோவியத் ரஷ்யாவில் யோகாசனப் பயிற்சி தரப்படுகிறதா?" என்று மற்ருெரு கேள்வி கேட்டார்.

"சின்னுட்களுக்கு முன் பத்திரிகைச் செய்தி ஒன்று இதுபற்றி வெளிவந்தது; அந்தச் செய்தி உண்மைதானு?'. எனக் கண்டறிந்து கூறுமாறு சோவியத் யூனியனில் உள்ள இந்தியத் தூதவருக்கு கடிதம் எழுதினேம்; இன்றுவரை பதில் இல்லை,"

என்ற பதில் ராம்நாராயண் கேள்விக்குப் பதிலாகத் தரப்பட்டதாம்.

23—11—54 அன்று, வாலாஜாபாத் இந்து மத பாடசாலை விஞ்ஞானப் பிரிவை கல்வி இலாகா டைரெக்டர் திரு.என்.டி. சுந்தரவடிவேலு திறந்து வைத்தார். படத்தில் திரு. என். டி. சுந்தரவடிவேலு, விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்தல ஸ்தாபனங்கள் இன்ஸ்பெக்டர் திரு. ஜே. சிவானந்தம், சட்ட இலாகா காரியதரிசி திரு ஏ. அழகிரிசாமி, சட்ட இலாகா துணைக் காரியதரிசி திரு. சி. டி. நடராசன் ஆகியவர்களைக் காணலாம்.

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 1—12—1954 புதன்


# அவர்கள்தான் காரணம்!

★

விவசாயிகளை, அவர்கள் பட்ட கடன் தொல்லையிலிருந்து தற்காலிகமாகக் காப்பாற்றப் போவதாகப் புகல் கூறிக்கொண்டு, சென்ற ஆண்டில் விவசாயக் கடன் ஒத்திவைப்புச் சட்டம் ஒன்றைக் கொண்டு வந்தார், அன்று ஆட்சி புரிந்துவந்த ஆச்சாரியார். அந்தச் சட்டத்தை, அந்நேரத்தில் அவர் கொண்டுவருவதற்கான, அவராலேயே உருவாக்கி, அல்லல் பட்டுக்கொண்டிருந்த அரசியல் சூழ்நிலையையும் நாம், அப்பொழுதே மிகமிகத் தெளிவாக ஆராய்ந்து எழுதி இருந்தோம்.

"காலப்போக்கில், தங்களுக்கு உண்டான விளைவு நன்மையா தீமையா என்பதை, ஏழை விவசாயிகள் ஓராண்டு கழித்து உணர்ந்துகொள்வர். இன்றையக் கொண்டாட்டத்தின் முழு விளைவு, அப்பொழுது விளக்கமாகத் தெரிந்துவிடும்" என்றும், "கடன், ஓராண்டு காலத்திற்கு ஒத்திவைக்கப்படுகிறது என்பதுதான் மசோதாவின் அடிப்படை. விவசாயிகள் பட்ட கடனை வசூலிக்க, இந்த ஓராண்டு காலத்திற்குள், சட்டப்படி எந்தவித நடவடிக்கையையும் கடன் கொடுத்தவர்கள் மேற்கொள்ளக்கூடாது என்பதுதான் சட்டத்தில் உள்ள நிபந்தனை. இதனால், இந்த ஓராண்டு இடைக்காலத்தில், முதலுக்குச் சேருகின்ற வட்டியும் சேர்த்து, அடுத்த ஆண்டுத் துவக்கத்தில் வழக்குத் தொடுத்து, சட்டப்படி கெடுபிடி செய்து வசூலித்துக் கொள்ள, கடன் கொடுத்தவர்களுக்கு இருக்கும் வாய்ப்பு எந்த வகையிலும் பாதிக்கப்பட்டுவிடவில்லை. எனவே, விவசாயிக்கு எப்பொழுதும் இருக்கிற கடன்தொல்லை நிரந்தரமாகத்தான் இருக்கப்போகிறது" என்றும், அப்பொழுது கடன் ஒத்திவைப்புச் சட்டத்தினால் ஏற்படும் பலாபலனை விளக்கி இருந்தோம்.

"ஏழை உழவர்களைக் கடன் தொல்லையிலிருந்து காப்பாற்றி, அவர்கள் வாழ்வில் வளம் பெருகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அமைச்சர் ஆச்சாரியாருக்கு உண்மையிலேயே இருக்குமானால், அதை, ஏழைகளுக்குக் கிடைக்கும் கடன் வசதிகளை நிலைகுலையச் செய்வதினால் சாதிக்கக்கூடிய காரியமல்ல. சர்க்காரே குறைந்த வட்டியில் ஏழை விவசாயிகளுக்குக் கடன் கொடுத்து, பல தவணைகளில் வசூலித்துக்கொள்ள ஏற்கனவே உள்ள கூட்டுறவு வசதிகளை விரிவாக்க முன்வர வேண்டும். நில உரிமையிலும் புரட்சிகரமான மாற்றம் செய்ய சர்க்கார் முனைய வேண்டும். இதை விட்டு விட்டு ஆச்சாரியார் எடுத்துக்கொள்ளும் முயற்சி சொந்தத்தில் மலிவாக விளம்பரம் பெறச் செய்யப்படும் முயற்சியே என்று நாம் கூறம் சாட்டுகிறோம்" என்று, விவசாயிகளை நிரந்தரமான கடன் தொல்லையிலிருந்து காப்பாற்றுவதற்கான வகையையும் அப்பொழுது நாம் எடுத்துக் காட்டி இருந்தோம்.

அந்தச் சட்டம் அடுத்த ஆண்டு பிப்ரவரி ஐந்தாம் தேதியோடு செத்து மடிகிறது. அச்சட்டத்தின் கீழ், தாங்கள் கொடுக்க வேண்டிய கடனுக்குக் கிடைத்திருந்த ஓராண்டு காலக்கெடு அன்றோடு முடிவடைந்துவிடுகிறது. முதலும், வட்டியுமாகச் சேர்த்து கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய கட்டாயத்தில் விவசாயிகள் எனப்படுவோர் தள்ளப்பட்டு இருக்கிறார்கள். சட்டம் நிறைவேற்றப்பட்ட காலத்தில் ஏற்பட்ட அற்ப சந்தோஷம், இரட்டிப்புத் துயரை விவசாயிகளுக்குத் தரக் காத்துக்கொண்டு இருக்கிறது.

சென்ற ஆண்டில் அமைச்சராக இருந்த ஆச்சாரியார் தம் சொந்த அரசியல் சுயநலங்கருதி, தம் அரசியல் எதிரிகளின் தொல்லையைக் கொஞ்ச நாளைக்கு இல்லாமல் செய்வதற்காக, தந்திரமாக விவசாயக் கடன் ஒத்திவைப்புச் சட்டமெனும் வலையை விரித்தார். அந்த வலையில், சில ஏழை விவசாயிகளிடம் தங்களுக்குள்ள பிடிப்பைக் காப்பாற்றிக் கொள்வது என்ற ஒன்றைமட்டுமே குறியாகக் கொண்ட அரசியல் சூதுமதியினர், அறிந்தோ அறியாமலோ ஒன்றாக விழ்ந்தனர். அந்த இடைக்கால ஏற்பாடு தங்கள் முயற்சியால் தான் கிடைத்தது என, ஏழை விவசாயிகளிடம் பொக்கமும் பேசிக்கொண்டனர். ஓராண்டுக்குத்தானே இந்தப் பரிகாரம் என்பதையும் ஆழ்ந்து யோசிக்காமல், ஏழை விவசாயிகளும் தாங்கள் பட்ட கடனை மறந்து மகிழவும் செய்தனர். இப்பொழுது சட்டம் காலாவதி ஆகும் நாள் நெருங்குவது கண்டு, அவர்கள், கண்களைப் பிசைகின்றனர். அந்தோ! வேதனை தரும் விசித்திரம்!

விவசாயக் கடன் ஒத்திவைப்புச் சட்டம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டதற்கே தாங்கள்தான் மூலகாரணம் என அந்த விவசாயத் தலைவர்கள் அன்று கூறினர்கள்—இன்றும் கூறுகிறார்கள். அன்று கூறி, அதனால் விவசாயிகளின் நன்மதிப்பைப் பெற்றார்கள்.

விவசாயக் கடன் ஒத்திவைப்புச் சட்டம் தங்கள் முயற்சியால்தான் கிடைத்தது எனக் கூறி, விவசாயிகளின் பாராட்டுதலைப் பெற்றவர்கள்தான், சட்டம் காலாவதியாவதால் விவசாயிகளுக்கு ஏற்பட இருக்கும் வேதனைக்கும் துபருக்கும் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். சென்ற ஆண்டிலேயே கடன்பட்ட விவசாயிகளை, கடன் தொல்லையிலிருந்து என்றென்றும் காப்பாற்றுவதற்கான ஒரு நிரந்தர ஏற்பாட்டைச் செய்திருக்க, அந்த விவசாயத் தலைவர்கள் முயற்சித்து இருப்பார்களானால், ஓராண்டுக்குக் கடன் வசூலிப்பு ஒத்திவைப்பது கண்டு மகிழவும், கெடு முடிவுறுவது கண்டு கண் பிசையவுமான பயங்கரமான நெருக்கடி ஏழை விவசாயிகளுக்கு ஏற்பட இடமே இருந்திருக்காது. சொந்தத் தலைவர்கள் சென்ற ஆண்டில் செய்த பெரும் பிழை, இந்த ஆண்டில் விவசாயிகளுக்கு வேதனை தரும் பெரும் தலைச்சுமையாகப் போய்விட்டது.

சென்ற சில ஆண்டுகளாக பருவமழை தவறிவிட்டதினால், ஏழை விவசாயிகளுக்கு ஏற்கனவே இருந்தக் கடன் சுமை பெருகுவதற்கு இடமாயிற்று. அந்த ஆண்டுகள் அனைத்திலும், அவர்கள் தங்கள் நாணயத்தை ஈடுகாட்டித்தான் கடன் வாங்கி வந்திருக்கிறார்கள். அந்த நாணயத்திற்கும் இனி மதிப்பு இருக்காது. விவசாயத் தலைவர்கள் சலியாது உழைத்துப் பெற்ற ஓராண்டு கடன் ஒத்திவைப்புச் சட்டத்தால் உருவான பலன் இதுதான்.

ஏற்கனவே விவசாயிகள் பட்டிருந்தக் கடனை சர்க்காரே முன்னின்று தீர்த்து, அதற்காக சர்க்கார் கொடுத்தக் கடனை பல தவணைகளாக விவசாயிகளிடமிருந்து வசூலித்துக் கொள்ள, சென்ற ஆண்டிலேயே சர்க்காரைப் பணியவைப்பதில் விவசாயத் தலைவர்கள் முயற்சித்திருந்தால், இன்று கையைப் பிசைய வேண்டிய அவலநிலை ஏழை விவசாயிகளுக்கு ஏற்படவே நியாயங்கிடையாது.

மேற்கூறிய ஏற்பாடு செயலாற்றப்பட்டிருந்தால், விவசாயிகளுக்கு நெஞ்சம் கலங்க வேண்டிய கட்டாயமோ, அவர்கள் நாணயத்[illegible]கப்பிக் கடன் கொடுக்க பிறர் அஞ்சக்கூடிய நெருக்கடியோ இப்பொழுது ஏற்பட்டு இருக்கவும் முடியாது. எனவே, இப்பொழுது விவசாயிகளுக்கு ஏற்பட்டுள்ள உள்ளக் குமுறலுக்கு, அவர்களுக்கு யார் தலைவர்கள் என பரம்பரைப் பாத்தியம் கொண்டாடுகிறார்களோ, அதே அரசியல் கழைக்கூத்தாடிகள் தான் முழுதும் காரணம் என்பதை, ஏழை உழவர் பெருமக்கள் மறந்துவிடக் கூடாது.

## ஆசிரியர்களும்கூட ...

"ஆசிரியர்களுடைய குறைபாடுகளை சர்க்கார் கேட்டு, அக்குறைகளை நீக்காவிடின், ஆசிரியர்கள் தொழிற் சங்கங்களில் சேர்ந்து சர்க்காருடன் போராடுவது தவறாகாது; அமெரிக்காவிலோ, ஆசிரியர்களது குறைகளைப் பெற்றோர்களே கவனித்து அரசாங்கத்தை வற்புறுத்துவர்; அவர்கட்கு வேலை நிறுத்தம் செய்ய உரிமை கிடைத்திருந்தபோதிலும், அவ்வுரிமையை உபயோகப் படுத்திக் கொள்ளவேண்டிய கேடு நிலைகள் அங்கு ஏற்படுவதில்லை."

இவ்வாறு, தஞ்சாவூர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சங்கச் சார்பில், தஞ்சை அந்தோனியார் உயர்நிலைப்பள்ளியில் நடைபெற்ற கூட்டம் ஒன்றில் பேசுகையில், டாக்டர் ஈகின் பி. லிங்க் எனும் அமெரிக்கப் பேராசிரியர் கூறினார்.

நடப்பு ஆண்டில் மொத்தம் சுமார் 1,08,33,000 ஏகரா விஸ்தீரணத்தில் நிலக்கடலை பயிர் செய்யப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

## ஐந்தாண்டுத் திட்டம்

### தென்னாட்டிற்கு தரும் பலன்

### 1¾ கோடி ரூபாயில் அணைக்கட்டு

சேலம், நவ. 28—

சேலம் மாவட்டம் கிருஷ்ணகிரி வட்டத்தைச் சேர்ந்த பெரியமுத்தூர் கிராமத்தில் தென்பெண்ணையாற்றின் மீது அணை சட்ட மாநில சர்க்கார் ரூ. 1,34,03,000 செலவிட அனுமதியளித்துள்ளனர் எனத் தெரிகிறது.

இந்த அணை கட்டப்பட்டால் 241 கோடி கனஅடித் தண்ணீர் தேக்கிவைக்கப்படக் கூடும் என சொல்லப்படுகிறது.

இதுதான் தென்னாட்டில் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் சேலம் மாவட்டத்தில் மேற்கொள்ளப்படும் முதலாவது பெரிய நீர்ப்பாசனத் திட்டமாகும்.

இதனால் 7500 ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கக் கூடுமாம்.

இதற்கான வேலை சீக்கிரமே துவங்குமாம்.

## விசாரணை முடிந்தது!

புதுடில்லி, நவ. 30—

மத்திய அரசாங்க வர்த்தகத் தொழில் இலாக்கா காரியதரிசியாக இருந்த எஸ். எ. வெங்கட்ராமன் என்ற ஐ. சி. எஸ். அதிகாரி மீது லஞ்சம் போன்ற குற்றங்களுக்காக நடைபெற்று வரும் விசாரணை முடிந்துவிட்டதாகத் தெரிகிறது.

இவர்மீது தொடரப்பட்டுள்ள வழக்குகளை விசாரணை செய்து வரும் விசேட நீதிபதி திரு. எஸ். பி. கபூர் ஐ. சி. எஸ்., வரும் டிசம்பர் 6-ந் தேதி தீர்ப்புக் கூறப்படலாமென சூசகமாக அறிவித்துள்ளாராம்.

## திராவிட மிளகு: சீனு வாங்குகிறது!

பம்பாய், நவ. 30—

இந்தியாவிலிருந்து செஞ்சீனு சுமார் 200 டன் மிளகு இந்த ஆண்டு இறக்குமதி செய்துகொள்ளும் என்று தெரிகிறது.

சென்ற ஆண்டில் சீனு 600 டன் மிளகு இந்தியாவிலிருந்து வாங்கியுள்ளது.

இந்தியாவிலிருந்து மிளகு வாங்குபவர்களில் சீனு புதிய நாடாகும் சிங்கப்பூரும் எதிர்பாரா வகையில் மிளகு பெறுகிறது. கடந்த அக்டோபரில் இந்தியா-70 டன் அமெரிக்காவிற்கு, 70 டன் இத்தாலிக்கு, கானடா, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கு 25 டன், இப்படியாக வெளி நாடுகளுக்கு சுமார் 325 டன் மிளகு ஏற்றுமதி செய்துள்ளது.

நவம்பர் 54 முதல் ஏப்ரல் 55 வரையில் மலபாரில் 19000 டன், திரு-கொச்சியில் 14000 டன் மிளகு விளையுமென மதிப்பிடப்பட்டுள்ளது.

சென்ற ஆண்டைக் காட்டிலும் இவ்வாண்டில், மலபாரில் மிளகு விளைச்சல் கால நிலை சாதகமாயில்லாது போனமையால், குறைவாகத் தானிருக்குமென்றும், ஆனால் திரு-கொச்சியில், சுமாரானவிளைச்சல் இருக்குமென்றும் தெரிகிறது.

இந்தியாவிலிருந்து அதிகமான மிளகு இறக்குமதி செய்துகொள்ளும் நாடு அமெரிக்கா. அது மொத்த விளைச்சலில் 60 சதவிகிதம் வாங்குகிறது.

## 10 அடி நீளப் புலி!

மைசூர் மாநில ராஜப்பிரமுகர், மைசூரிலிருந்து 50 மைல் தொலைவில் உள்ள 'கக்கனக்கோட்டா' காட்டில், 10 அடி 8 அங்குல நீளமுள்ள மிகப்பெரிய ஆண் புலி ஒன்றைச் சுட்டு வீழ்த்தியதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

இந்தியாவில் காணப்படும் புலிகளில் இது மிகவும் பெரியது எனக் கூறப்படுகிறது. புலியின் எடை 900 ராத்தலுக்கு மேல் உள்ளதாம்.

## ரயில்வே ஊழியர்கள்

### 6 லட்சம் பேருக்கு வீட்டு வசதி செய்யப்படவில்லை

இந்திய ரயில்வேக்களில் பணி புரியும் ஊழியர்களில் இன்னும் சுமார் 6 லட்சம் பேர்களுக்கு வீட்டு வசதி செய்து தரவேண்டியுள்ளது.

இந்த ஆண்டில் 4,865 வீடுகள் சிப்பந்திகளுக்காகக் கட்டித் தரப்பட்டுள்ளது.

இவற்றில் 4,853 வீடுகள் மூன்றும், நான்காம் வகுப்புச் சிப்பந்திகளுக்கான வீடுகளாகும்.

இத்தகவலை ரயில்வே இலாகா உதவி மந்திரி ஓ. வி. அழகேசன் கேள்வி ஒன்றுக்குப் பதிலாக மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

## சிந்திரியில் 'கோக்' தொழிற்சாலை

### உற்பத்தி துவக்கம்

சிந்திரி உர உற்பத்தித் தொழிற்சாலையில் இரண்டரை கோடி ரூபாய் செலவில் அமைக்கப்பட்டிருக்கும் 'கோக்' தொழிற்சாலையை பீகார் முதல் அமைச்சர் கிருஷ்ண சின்ஹா திறந்து வைத்தார்.

இத்தொழிற்சாலை ஆண்டுதோறும் நிலக்கரியிலிருந்து 2,00,000 டன் 'கோக்' தயார் செய்யுமென்று தெரிகிறது. இதன் மதிப்பு சுமார் ரூ. 70 லட்சமாகும்.

சிந்திரி உர உற்பத்தித் தொழிற்சாலையைச் சேர்ந்த நிலையங்கள் அனைத்திற்கும் தேவையான 'கோக்' இதன் மூலம் தயார் செய்யப்படும் என்று சொல்லப்படுகிறது.

இத்தொழிற்சாலை இந்தியாவில் முதன்மையானதும், உயர்தரமானதுமாகும் என்று தெரிகிறது.

ஜெர்மன் கம்பெனியான 'கார்ல் ஸ்டில்' கம்பெனியாரால் இத்தொழிற்சாலை அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

★

## துர்காபூர் 'கோக்' தொழிற்சாலை

### நிபுணர் குழு நியமனம்

மேற்கு வங்க சர்க்கார் துர்காபூரில் அமைக்கத் திட்டமிட்டிருக்கும் 'கோக்' நிலக்கரியிலிருக்கும், தார் மற்றும் இதர பொருள்களைத் தயார் செய்யும் தொழிற்சாலை பற்றி ஆராய திட்டக் கமிஷன், நிபுணர் குழு ஒன்றை நியமித்திருக்கிறது.

## அரிசி இருக்கிறது; ஆனால் வாங்குவாரில்லை

### கூசாமல் கூறுகிறார் மத்திய மந்திரி

புதுடில்லி, நவ. 29—

"இந்தியாவில் இப்போது இரண்டு அல்லது மூன்று லட்சம் டன் அரிசி ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையில் உற்பத்தி உள்ளது; ஆனால், நாட்டில் வாங்குபவர்கள்தான் இல்லை. அடுத்த ஆண்டு ஓரளவு அரிசி ஏற்றுமதி செய்ய முடியும்," என்று உதவி உணவு மந்திரி கிருஷ்ணப்பா மக்கள் சபையில் கேள்வி ஒன்றுக்கு பதில் தந்துள்ளார்.

உணவுப் பண்டங்களின் இப்போதுள்ள விகிதமே உ... படலாமெனவும், அதிகமாக இ... ஏற்றுமோ, இறக்குமோ இ... வும் அவர் கூறியுள்ளார்.

கூட்டுறவுப் பண்ணைக... பதற்காக சேலம் ஆத்தூர் ... வில் சுமார் 500 ஏக்கர் ... தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள... மாநில கூட்டுறவு ... அதிகாரி ... சேலம் மாவட்டத்தில் ... பல பாகங்களிலும் சுற்றுப் பயண[ம்] ... செய்த பின்னர் இந்த இடத்[தைத்] ... தேர்ந்தெடுத்துள்ளதாகத் தெரிகிறது.



# '1942-லிருந்து லஞ்சப் பழக்கம் வளருகிறது'

## 'வருமான வரி, விற்பனை வரி, வியாபாரம் ஆகியதுறைகளில் லஞ்சம்தாண்டவமாடுகிறது'

## 'பாதுகாப்புத் துறையிலும் அது புகுந்து கிடக்கிறது'

### 'சர்க்கார் அதிகாரிகளுக்கு லஞ்சம் தரும் வர்த்தகர்களே அதன் வளர்ச்சிக்கு மூலபுருஷர்கள்'

"........இந்தப் பிரிவின்படி, மந்திரிகளுக்கும், சர்க்கார் ஊழியர்களுக்கும் பாதுகாப்பு தரக்கூடாது;

"1942-க்குப் பிறகு, வருமான வரி, விற்பனை வரி, வர்த்தகம், பாதுகாப்பு ஆகிய இலாகாக்களில் லஞ்ச ஊழல் மோசமான அளவு வளர்ந்துள்ளது. வர்த்தகர்களும், வியாபாரிகளும்கூட லஞ்ச ஊழல் வளர்ச்சிக்குக் காரணமானவர்கள்தான்; ஏனெனில், அவர்கள்தான் அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்து வருபவர்கள்;

"லஞ்ச ஊழல் பற்றி சர்க்காருக்கு இரகசிய தகவல் தருவோரின் பாதுகாப்பிற்காக, 1947-ம் வருடத்திய லஞ்ச ஒழிப்புச் சட்டப் பிரிவுகளை பலப்படுத்த வேண்டும்; பின், புகார் செய்யப்படுகிற சர்க்கார் ஊழியர்கள்மீது விசாரணைக் குழு ஒன்று விசாரணை நடத்த வேண்டும்; சர்க்கார் ஊழியர்களுக்கு லஞ்சப் புகாரிலிருந்து பாதுகாப்பு தரும் பிரிவுகளை நீக்கிவிட வேண்டும்,"

—என்று, பம்பாய் காங்கிரஸ் உறுப்பினரான யூ. ஆர். பகவத் என்பவர், மக்கள் சபையில், கிரிமினல் சட்ட திருத்த மசோதாமீது பேசுகையில் குறிப்பிட்டார். எதிர்க்கட்சியினர், இவர் பேசியபோது ஆரவாரப் பேரொலி எழுப்பி, அவரது குறிப்புகளை வரவேற்றனர்.

சர்க்கார் அதிகாரிகளை அவதூறுக்குள்ளாக்குபவர்கள், வீண்பழி சுமத்துபவர்கள்மீது குற்ற நடவடிக்கை மேற்கொள்ளும் அதிகாரத்தை சர்க்காருக்கு வழங்கும் பிரிவுகளைக்கொண்ட கிரிமினல் சட்டதிருத்த மசோதா மீது மக்கள் சபையில் நடைபெற்றுவரும் விவாதத்தின் போது பல கட்சி அங்கத்தினர்களும் கண்டித்துள்ளனர்.

இந்தப் பிரிவுகளின்படி, ஜனாதிபதி, உதவி ஜனாதிபதி, கவர்னர் அல்லது ராஜப்பிரமுகர்கள், மந்திரிகள், மற்றும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ஆகியோர் மீது நடவடிக்கை எடுக்க பப்ளிக் பிராசிகியூடருக்கு அதிகாரம் கோரப்படுகிறது.

உத்திர பிரதேசத்தைச் சேர்ந்த இன்னுமொரு காங்கிரஸ்காரரான மூல்சந்த் ரூபே என்பவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"சர்க்கார் ஊழியர்களுக்குப் பாதுகாப்பு தர முனைகிற சர்க்கார், பொது மக்களுக்கும் பாதுகாப்பு தர முன்வர வேண்டும்.

"லஞ்ச ஊழலுக்குப் பேர் போன சர்க்கார் ஊழியர்களிடமிருந்து பொது மக்களுக்கு பாதுகாப்புத்தர வழிவேண்டாமா? லஞ்சக் குற்றம் சுமத்தப்படுகிற ஊழியர்கள் மீது விசாரணை நடத்த சர்க்கார் முன்வரத் தயங்கலாகாது.

"இந்த மசோதாவில் அப்படி விசாரணை கட்டாயமாக நடத்தப்பட வேண்டுமென்பதை வலியுறுத்தும் வழிகள் அமைக்கப்பட வேண்டும்;

"இந்த விசாரணைகள் பொய்த்துப் போனால்தான், சர்க்கார் ஊழியர் மீது அவதூறு கிளப்பியதாக வழக்குத் தொடர அனுமதிக்க வேண்டும்," என்றார்.

சதன்குப்தா என்ற மேற்கு வங்கத்தைச் சேர்ந்த கம்யூனிஸ்டு உறுப்பினர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"மசோதாவின் இந்தப் பிரிவுகள் நிறைவேற்றப்பட்டால் நாட்டில் பாசிசம் வேர்விடுகிறது எனப் பொருளாகும்; இத்தகையதொரு பாதுகாப்பு சர்க்கார் ஊழியர்களுக்குத் தரப்படுவதை, கம்யூனிஸ்டு கட்சி அடியோடு வெறுக்கிறது;

"அவதூறு பற்றிய விஷயத்தில் ஜனாதிபதி, உதவி ஜனாதிபதி, மந்திரிகள், கவர்னர்கள், ராஜப்பிரமுகர்கள், சர்க்கார் ஊழியர்கள் ஆகியோர் மட்டும் ஒரு தனிப் பிரிவாகக் கொள்ளப்படுவானேன்? உலகத்தில் வேறெந்த நாட்டிலும் இத்தகு பாகுபாடுகள் இல்லையே!

"சர்க்கார் ஊழியர்கள்மீது அவதூறு கிளப்புவதை தண்டனைக்குரிய குற்றமாக்குவதின் மூலம் லஞ்ச ஊழல் அம்பலமாகும் என்று திரும்பத் திரும்பக் கூறும் டாக்டர் கட்ஜூவின் வாதத்தில் பொருள் இல்லை; மாறாக, இத்தகையதோர் பாதுகாப்பு தரப்படுவதினால், லஞ்சஊழல்வெளிவரவேஏது இல்லாது போய்விடும்; பத்திரிகைகளும் கட்டுப்படுத்தப்படும்; எப்படியாயினும் சர்க்கார் பாதுகாப்பைத் தருகிற இந்தப் பிரிவுகளை நிறைவேற்றித்தான் ஆகவேண்டுமென்று முடிவு கட்டியிருந்தால், சில திருத்தங்களைக் கூற விரும்புகிறேன்—'விசேட சலுகைகள் ஜனாதிபதிக்கு மட்டும் தான் தரப்படும் என்ற வரம்பு வேண்டும்; பப்ளிக் பிராசிகியூடர்கள் அவதூறு வழக்குகளைத் தொடர அனுமதிக்கப்படுவதற்கு மாறாக, மத்திய அரசாங்கத்திற்கு அட்டர்னி ஜெனரலும், மாநில அரசாங்கத்திற்கு அட்வகேட் ஜெனரலும் அதிகாரமளிக்கப்படலாம்; அத்தகைய வழக்குகள் கூட மந்திரி சபையின் முன் அனுமதியுடன்தான் தொடரப்பட வேண்டும்."

## ஒரு எஞ்சின் விலை!

இந்தியாவில் தயாரிக்கப்படும் ஒரு ரயில்வே எஞ்சின் விலை ரூ. 5,32,000 என்று உதவி ரயில்வே மந்திரி அழகேசன் மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

இந்த விலையில், எஞ்சின் உற்பத்தியாகும் சித்தரஞ்சன் தொழிற்சாலையில் முடக்கப்பட்டுள்ள மூலதனத்திற்கான வட்டி சேர்த்துக் கணக்கிடப்படவில்லையாம்.

[illegible] வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகிற எஞ்சின் ஒன்றின் [illegible]லை 5,25,000 ரூபாயிலிருந்து [illegible],50,000 ரூபாய் வரையுள்ளது என்றும் அவர் கூறினார்.

கொழும்புத் திட்டத்தின் கீழ், கானடாவிலிருந்து இந்தியாவுக்கு 120 எஞ்சின்கள் கிடைக்கும் என்றும், அவை 10 சதவிகித மானிய அடிப்படையில் கிடைக்கும் என்றும் உதவி மந்திரி கூறியிருக்கிறார்.

## வருகிறார்!

இந்தியாவில் சுமார் இரண்டு வாரம் சுற்றுப் பயணம் செய்வதற்காக யூகோஸ்லேவிய ஜனாதிபதி மார்ஷல் டிட்டோ, நவம்பர் 29-ல் பெல்கிரேடிலிருந்து புறப்பட்டுவிட்டார் எனத் தெரிகிறது.

## திருப்பூரில் முத்தமிழ் விழா

திருப்பூர் முத்தமிழ்க் கலை வளர்ச்சி மன்றத்தின் சார்பில் 21—11—54 காலை 11 மணிக்கு சந்தைப் பேட்டை ஆபீஸ் திடலில் முத்தமிழ் விழா நடைபெற்றது. திரு. சிந்தனைச்செல்வன் எல்லோரையும் வரவேற்றுப் பேசியதோடு நாஞ்சில் கண்ணப்பாவை விழா வைத்துவக்கிவைக்கும்படி கேட்டுக் கொண்டார். துவக்க உரைக்குப் பின் தோழர் எ. சேனாபதி எம். எல். ஏ., விழாவிற்குத் தலைமை வகித்து சொற்பொழிவாற்றினார். அடுத்து தோழர் தி. தண்டபாணி, 'வீர வாழ்வு' என்பது பற்றி சொற்பொழிவாற்றினார்.

சி. இலக்குவனார், கா.கோவிந்தராசன், க. அறிவழகன் ஆகியோர் பல்வேறு தலைப்புகளில் சொற்பொழிவாற்றினர்.

அடுத்து, மன்றத்தினரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த போட்டிகளில் பரிசு பெற்ற மாணவ மாணவியருக்கு தோழர் ஆர்.வி.ஈ. வெங்கடாசலம் பரிசுகள் வழங்கினார். பிறகு தோழியர் டி. ஆர். கஜலட்சுமி குழுவினரின் இன்னிசை நடைபெற்றது.

மீண்டும் இடைவேளைக்குப்பின், திருப்பூர் இளைஞர் நடிகர் மன்றத்தாரின் "ஆண்டவன் எங்கே"? என்ற நாடகம் நடைபெற்றது. அதில் நன்கு நடித்தவர்களுக்கு தனித் தனியே பரிசுகளும், மன்றத்திற்காகப் பதக்கமும் அளிக்கப்பட்டது.

## பாதுகாப்பு!

மாஸ்கோ, நவ. 29—

"ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள கம்யூனிஸ்டு நாடுகள் தங்கள் தற்காப்பை பலப்படுத்திக் கொள்ள வேண்டும். மேற்கு ஜெர்மனியை மேற்கத்திய வல்லரசுகள் மீண்டும் ஆயுதபாணியாக்குவதை முன்னிட்டு, கம்யூனிஸ்டு நாடுகள் கண்காணிப்புடன் இருக்க வேண்டும்," என்று ஐரோப்பிய பாதுகாப்பு மாநாட்டில் பேசிய மாலடோவ் குறிப்பிட்டிருக்கிறார்.

## தடைகள் பெருகுகின்றன!

சென்னை, நவ. 29—

சென்னை புதிய சட்டசபைக் கட்டிடத்தைச் சுற்றியுள்ள இடங்களிலும், கோட்டையில் உள்ள மேல்சபைக் கட்டிடத்தைச் சுற்றியுள்ள சாலைகளிலும் ஊர்வலங்களோ, பொதுக் கூட்டங்களோ நடத்தக்கூடாதெனக் கூறும் நகர போலீஸ் சட்டத்தின்கீழ் தடை உத்தரவொன்றைப் பிறப்பித்துள்ளார் நகர போலீஸ் கமிஷனரான பார்த்தசாரதி ஐயங்கார். இந்த தடை உத்திரவு டிசம்பர் 1-ந் தேதி முதல் 31-ந் தேதி வரையில் அமுலிலிருக்குமெனத் தெரிகிறது.

## "கைதிகளிடம் சமூக எதிர்ப்பு உணர்ச்சி வளருகிறது"

### அனுமந்தையா தாக்கப்பட்ட வழக்கில் நீதிபதி கருத்து

மைசூர் முதல் அமைச்சர் அனுமந்தையா, சட்டசபைக் கட்டிடம் கட்டப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, மகாதேவ் என்ற கைதியினால் தாக்கப்பட்டதாக வழக்கு ஒன்று நடைபெற்றது அனைவரும் அறிந்ததே.

இந்த வழக்கை விசாரணை செய்த பெங்களூர் முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் தீர்ப்பளிக்கையில், அக்கைதியின் மீது பரிதாபப்பட்டதாகத் தெரிகிறது.

மகாதேவுக்கு ஒரு ஆண்டு கடின காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

தீர்ப்புக் கூறுகையில், நீதிபதி, "சிறையில் கைதிகளின் வாழ்வைப் புனரமைப்பதின் மூலம் அவர்களை நாட்டிற்குப் பயன் தரும் நல்ல குடிமக்களாகத் திருத்துவதைவிட, அவர்கள் வாழ்க்கையில் வெறுப்படையுமாறு செய்யப்படுகிறார்கள்; அவர்கள் சமுதாய எதிரிகளாக, பின்னர் பெரும் அளவில் சமூகத்திற்குத் தீங்கிழைப்போராக ஆகிவிடுகிறார்கள்," என்று குறிப்பிட்டார்.

இந்த வழக்கில், குற்றம் சாட்டப்பட்ட கைதி, "சிறை நிர்வாகத்தில் ஏற்பட்ட வெறுப்பின் காரணமாகவே இவ்வாறு குற்றம் புரிந்தான்," என்று நீதிபதி குறிப்பிட்டார்.

"சிறையில் உள்ள கைதிகள் தங்களுக்குள்ள ஏராளமான குறைகளை உணர்ந்து துன்புற்றார்கள் என்றும், அக்குறைகளை அதிகாரிகளிடம் எடுத்துச் சொல்லியும் பயன் எதும் ஏற்படவில்லை என்பதை கைதிகள் உணர்ந்து கொண்டனர்," என்றும் நீதிபதி குறிப்பிட்டு மேலும் கூறியதாவது:—

"அவர்களது குறைகள் நியாயமானவையா, இல்லையா என்பது பற்றிச் சொல்ல வேண்டியது என் பொறுப்பல்ல; ஆனால், இங்கே, சாட்சிக் கூண்டிலே நின்ற எதிர்தரப்பு சாட்சிகளான கைதிகள் அனைவரும், வாழ்க்கையில் வெறுப்புற்றவர்களாக, எதைப்பற்றியும் கவலைப்படாதவர்களாக, சமூகத்தின் மீது வெறுப்புணர்ச்சி கொண்டவர்களாகக் காணப்பட்டார்கள் என்பதைச் சொல்லவேண்டியுள்ளது."

## தீண்டாமைஒழிப்பில்பம்பாய்தீவிரம்

### நாடகம், நாடோடிப் பாடல்கள் மூலம் பிரச்சாரம் நடைபெறும்

### ஜாதிக் கொடுமைகள் பற்றி சொற்பொழிவாற்ற தனிப் பிரசாரகர்கள் நியமனம்

பம்பாய் சர்க்கார் தீண்டாமை ஒழிப்பிற்காக தீவிரமான திட்டங்கள் பலவற்றை நிறைவேற்ற இருக்கிறார்கள்.

இத்திட்டங்களில் முதன்மையானது, ஏராளமான பயிற்சியளிக்கப்பட்ட இளைஞர்கள், தீண்டாமை ஒழிப்புப் பற்றியும், தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றம் பற்றியும் பிரச்சாரம் செய்ய நியமிக்கப்படுவார்கள்.

இப் பயிற்சியில், பஞ்சாயத்து முறைகள், வாக்குரிமை, பயிர்த்தொழில், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு பற்றி சர்க்கார் செய்துள்ள சட்டங்கள் ஆகியவைகள் பற்றி பிரச்சாரகர்களுக்குக் கல்வி மூலம் போதனை அளிக்கப்படும்.

பம்பாய் சர்க்கார் பதினேரு திட்டங்களை தீட்டியுள்ளார்கள் என்றும், இவைகளுக்கு மத்திய சர்க்காரிடமிருந்து ரூ. 4 லட்சம் மானியம் கிடைக்குமென்றும் கருதப்படுகிறது.

தீண்டாமை ஒழிப்பின் அவசியம் பற்றிய சினிமாப் படம் ஒன்று தயாரிப்பது, இதுபற்றி எழுதப்படும் நல்ல நாடகங்களுக்குப் பரிசளிப்பது, உயர் ஜாதி—தாழ்ந்த குல மக்கள் எனப்படுவோரிடையே மாநாடுகள் நடத்துவது, பத்திரிகைகள், சினிமா 'சிலேடு'கள் மூலம் விளம்பரம் செய்தல் ஆகியவை பம்பாய் சர்க்காரின் திட்டங்களாகும்.

"தாழ்த்தப்பட்ட மக்களைக் கொண்டு, உயர் ஜாதி எனப்படுவோர் வாழும் பகுதிகளில் உணவு விடுதி நடத்துமாறு செய்வது—அந்த உணவு விடுதிகளுக்கு சர்க்கார் மானியம் அளிப்பது என்பதும் ஒரு திட்டமாகும்," என்று, பம்பாய் சர்க்கார் பிற்பட்ட வகுப்புகள் துறை அமைச்சர் கூறியுள்ளார்.

கிராம மக்களிடையே தீண்டாமை உணர்ச்சியைப் போக்க ஊக்கமளிக்கும் பொருட்டு, சிறந்த முறையில் பணியாற்றும் கிராமங்களுக்குப் பரிசளிக்க சர்க்கார் திட்டமிட்டிருக்கிறதாம்.

மராத்தி, கன்னடம், குஜராத்தி ஆகிய மூன்று மொழிகளிலும், தீண்டாமையின் கொடுமைகளை விளக்கியும், அதை ஒழிக்க வேண்டியதின் அவசியத்தை வற்புறுத்தியும் எழுதப்படும் நாடகங்களுக்குப் பரிசளிப்பது என்றும் சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்களாம்.

தாழ்த்தப்பட்ட மக்கள்—உயர்குல மக்கள் எனப்படுவோர் அனைவரும் ஒன்றாக அமர்ந்து உணவு உண்ணும்படி, 'சமூக உணவு விருந்து'களை சர்க்கார் ஏற்பாடு செய்யுமாம்.

எல்லா வகுப்புக் குழந்தைகளும் கலந்து பழகுமாறு செய்ய சர்க்கார் தனி விளையாட்டுக் கூடங்களை அமைக்கப் போகிறதாம்.

கிராமாந்திரப் பகுதிகளில் நிலவும் தீண்டாமையைப் போக்க பிரச்சாரம் நல்ல பயன் அளிக்குமென்று பம்பாய் சர்க்கார் கருதுவதாக பிற்பட்ட வகுப்புகள் துறை அமைச்சர் கூறினார்.

சொற்பொழிவுகள் மட்டுமின்றி, இசை நிகழ்ச்சிகள், காலட்சேபங்கள் இவைகள் கிராமப் பகுதியில் நல்ல பயன் தரும் என்றும் சர்க்கார் கருதுகிறதாம்.

இத்திட்டத்தை நிறைவேற்ற பம்பாய் சர்க்கார், இசை வல்லுனர்கள், நாடோடிப் பாடகர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பைக் கோருவதென்றும் முடிவு செய்திருக்கிறதாம்.

தாழ்த்தப்பட்ட மக்களைக் கொண்டு, நகரங்களில் சிறந்த உணவு விடுதிகளை அமைக்க சர்க்கார் ஒரு லட்சம் ரூபாய் செலவு செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்றும் தெரிகிறது.

## பிரிட்டிஷார் நேர்மையற்றவர்கள்!

### மாணவர்கள் கூறுகிறார்கள்

"பிரிட்டிஷ் மக்கள் நேர்மையற்றவர்கள்; நம்பமுடியாதவர்கள்; கிறித்துவ மத பண்புகளுக்கு மாறுபட்டவர்கள்"

என்று பிரிட்டனில் கல்வி பயிலும் காலனி நாடுகளின் மாணவர்கள் 8,000 பேர்களில் 300 பேர் கருத்து தெரிவித்திருக்கின்றனர்.

அரசியல், பொருளாதார அமைப்பு ஒன்றின் அறிக்கையில் இச்செய்திகள் காணப்படுகின்றன.

பிரிட்டன் பற்றிய தங்கள் கருத்தைக் கூறுமாறு கேள்வித் தாள் ஒன்றின் மூலமாக இந்த மாணவர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர் என்று தெரிகிறது.

மாணவர்களின் கருத்துப் பற்றிய முழு அறிக்கை வெளியிடப்படவில்லை. அதன் சுருக்கம் மட்டுமே வெளியிடப்பட்டுள்ளது.

மாணவர்கள் பிரிட்டனைப் பற்றி நினைத்திருந்தமைக்கு மாறாகவே பிரிட்டனில் சூழ்நிலைகள் காணப்படுவதாக கூறப்பட்டுள்ளது.

# டிசம்பர் 2—அணு யுகம் பிறந்த நாள்

★

முதன் முறையாக அணு உலை உருவாகி டிசம்பர் 2-ந் தேதியோடு சரியாக 12 ஆண்டு ஆகிறது. அணுவை உடைத்துத் தட்டுப்பாடு இல்லாமல் வெப்பம் உண்டாகும் முதலாவது அணு உலை அன்றுதான் தோன்றிற்று. உலகமெங்கும் விஞ்ஞானிகள் பலர், 1942-ம் ஆண்டு டிசம்பர் 2-ந் தேதியை, 'அணு யுகம் பிறந்த நாள்' எனக் கருதுகின்றனர்.

அந்த முதலாவது அணு உலையை ஆக்கியவர் காலஞ்சென்ற டாக்டர் என்ரிக்கோ பேர்மி என்னும் பௌதிக விஞ்ஞானி. அமெரிக்காவில் சிக்காகோ நகரத்தில் அணுயுகத்தைத் தோற்றுவித்த அவர் இத்தாலியில் பிறந்தவர். உலகம் அவரை 'அணுயுகச் சிற்பி' என அழைப்பதுண்டு.

நினைத்தவாறு அணு உலையைக் கட்டுப்படுத்தி அதிலிருந்து வெப்பம் பெறும் முறையை முதன்முதலாகத் தோற்றுவித்த புகழுடைய பேர்மிக்கு அமெரிக்க அணுசக்திக் கமிஷன் (நவம்பர் 16-ல்) விசேஷ பரிசு வழங்கியது.

"அணுசக்தியை வென்றுவிட்டோம்; அதனை அழிவு செய்வதற்கு அல்லாமல் மக்கள் இனத்துக்குச் செழிப்பு மல்கும் ஒரு புதுயுகம் தோற்றுவிப்பதற்காக உபயோகிக்கலாம் என நான் உண்மையாகவே நம்புகிறேன்," என்று டாக்டர் பேர்மி தமது மரணத்துக்கு முன்பு கூறிய மொழியாகும்

இந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலத்திற்குள், அணுசக்தி, மாபெரும் அழிவு சக்தியாக ஆனதையும், அமைதிக்குரிய துறைகளில் பெரும் பெரும் நன்மை செய்யக்கூடியதாக வளருவதையும் உலகம் கண்டுவிட்டது. அணுவை மக்களுக்கு அடிமை செய்யும் அமைதியான மிகச் சிறந்த ஊழியனாக ஆக்க அமெரிக்காவும், பிரிட்டனும், மற்றுமுள்ள சுதந்திர நாடுகளும், இயன்ற முயற்சிகளெல்லாம் செய்கின்றன. சர்வதேச அணுசக்தி ஸ்தாபனத்துக்கு 'தோரியம்' வழங்குவதாக இந்தியாவும் முன்வந்துள்ளது.

அணு சக்தியை "மக்கள் இனத்துக்குச் செழிப்பு மல்கும் ஒரு புதிய யுகம் தோற்றுவிப்பதற்காக உபயோகிக்கலாம்" என்று டாக்டர் பேர்மி உளமார நம்பிய நம்பிக்கையை, தமது நம்பிக்கையாகக் கொள்ளாத பொறுப்புள்ள தலைவர் சுதந்திர உலகில் இன்று எங்கும் இல்லை.

அணு 'ரியாக்டர்' என்றாலும், 'அணு உலை' என்றாலும் ஒன்றே. யுரேனியம் அல்லது அணுச் சிதைவுள்ள வேறு ஒரு பொருள் அதில் இருக்கும். யுரேனிய அணு ஒன்றை உடைத்தால், 'நியூட்ரான்' எனப்படும் நுண்ணிய துகள்கள் புறப்படும். நியூட்ரானால் தாக்கப்பட்ட மற்ற அணுக்களும் உடைபட்டு மேலும் பல நியூட்ரான்கள் உண்டாகும். இவ்வாறு அணு உடைபட்டு உடைபட்டுத் தாங்க முடியாத வெப்பம் உண்டாகிறது. வேண்டும்பொழுது இவ்வாறு வெப்பம் உண்டுபண்ணவும், வேண்டாத போது அவ்வுற்பத்தியை நிறுத்தி வைக்கவும் தகுந்தவாறு டாக்டர் பேர்மியும், அவருடன் உழைத்தவர்களும், 'அணு உலை'யை ஆக்கியிருக்கிறார்கள். அணு சக்தியை, அமைதிக் காலத்து ஆக்க வேலைகளில் செலுத்துவதற்கு 'அணு உலை'கள் மிகவும் முக்கியமான சாதனங்களாகும்.

'அணு உலை'களில் பாஸ்பரஸ், கோபால்ட் முதலிய சாதாரண இரசாயன மூலப் பொருள்களைப் புகுத்தி, அவற்றையும் அணுச் சிதைவுள்ள பொருள்களாக மாற்றலாம். இவற்றை "ரேடியோ ஆக்டிவ் ஐஸடோப்புகள்" அல்லது "ரேடியோ ஐஸடோப்புகள்" என்பார்கள். அவற்றை, 'அணுக் கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகள்' என்று கூறலாம். ஆக்கவேலைகளில் அணு சக்தியைச் செலுத்துவதற்கு இந்தக் கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகள் அருமையான கருவிகளாக வாய்த்துள்ளன.

விஞ்ஞானத்துக்கு "மைக்கிராஸ்கோப்" எவ்வளவு இன்றியமையாத கருவியோ, அவ்வளவு இன்றியமையாததாகியுள்ளது கதிரியக்கமுள்ள ஐஸடோப்பும். வைத்தியம், விவசாயம், தொழில் முதலிய துறைகளிலெல்லாம் கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகள் பெரிதும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

வைத்தியத்தில் சில வகைப் புற்று நோய்களையும், மற்றும் பல பிணிகளையும் அறிந்து குணமாக்குவதற்கு கதிரியக்கமுள்ள ஐஸடோப்புகள் விஞ்ஞானிகளுக்கு மிகவும் உதவியுள்ளன.

பயிர் வகைகளைச் சிறந்தவையாக்கி விளைவைப் பெருக்க அவை உதவி செய்கின்றன. தொழில் துறையில் உற்பத்தியின் செலவு குறையவும், தரம் உயரவும் அவை செம்மையாகப் பயன்படுகின்றன. பல துறைகளிலும் விஞ்ஞான ஆராய்ச்சி முன்னேறுவதற்கு அவை பெருந் துணையாகியுள்ளன.

அணுவிலிருந்து மின்சாரம் எடுப்பதற்கும் வேலை நடக்கிறது. அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் அதற்காகப் பெரிய பெரிய அணு உலைகள் செய்கிறார்கள். இன்னும் சில ஆண்டுகளில் வேறுபல நாடுகளிலும் அத்தகைய அணு உலைகள் கட்டப்படும் எனத் தெரிகிறது.

இந்த 'அணு உலை'களில், அணுவை உடைத்து வெப்பம் பெறுகிறார்கள். இந்த வெப்பத்தால் நீரை ஆவியாக்கி, நீராவியால் 'டர்பைன்' இயந்திரத்தை ஓட்டுகிறார்கள். டர்பைன் இயந்திரம், மின்சார உற்பத்தி இயந்திரத்தை இயக்க, மின்சாரம் உற்பத்தியாகிறது. இதனை அணு மின்சாரத் தொழிற்சாலை எனலாம். இதற்கும், சாதாரண மின்சார உற்பத்திச் சாலைக்கும் உள்ள வித்தியாசம் ஒன்றுதான்; மற்ற மின்சார உற்பத்திச்சாலைகளில், நிலக்கரியோ, எண்ணெயோ இருக்கும்; இதில் யுரேனியம் இருக்கும்.

சர்வதேச அணுசக்தி நிறுவனம் இப்பொழுது உருவாகிக் கொண்டிருக்கிறது. அதற்கு அமெரிக்காவும், பிரிட்டனும் யுரேனியம் கொடுத்திருக்கின்றன. இது அணு உலைகள் செய்வதற்கு உதவியாகும் எனத் தெரிகிறது.

இவ்வாறு செய்யப்படும் சிறிய அணு உலைகள், கதிரியக்கமுள்ள ஐஸ்டோப்புகள் உற்பத்தி செய்யப் பயன்படும்; அணுவைப் பற்றியும் அதனை எவ்வெவ்வாறு ஆக்கமான துறைகளில் பயன்படுத்தலாம் என்பது பற்றியும் அறிவதற்கும், அவை பெரிதும் பயன்படும் என்று விஞ்ஞானிகள் கருதுகிறார்கள்.

இன்றைய அணு உலைகள் தோன்றுவதற்கு வழிகாட்டியாக இருந்த முதலாவது அணு உலை சரித்திரப் புகழ் வாய்ந்ததெனினும் அதன் அமைப்பு எளிமையானதே. அதன் அமைப்பை மேற்பார்த்தவரும் அதனை ஆக்குவதற்குப் பொறுப்பாயிருந்தவரும் டாக்டர் பேர்மியாவார்.

முதலில் ஒரு மரச்சட்டத்தை அடியில் வைத்தார்கள். அதன் மேல் அடுக்கடுக்காகப் பென்சில் கரி அல்லது கிராபைட்டு என்பதை வைத்தார்கள். இந்த கிராபைட்டு அடுக்குகளில் ஒன்றுவிட்டு ஒன்றின் மூலைகளில் யுரேனியம் அல்லது யுரேனியம் ஆக்ஸைடு கட்டி கட்டியாக வைக்கப்பட்டிருந்தது. கிராபைட்டு அடுக்குகளில் துவாரங்கள் இருந்தன; அவற்றின் வழியே காட்மியம் கம்பிகள் செருகப்பட்டிருந்தன. நியூட்ரானைக் கவர்ந்து கொள்ளக்கூடியது காட்மியம்; எனவே தட்டுத் தடங்கல் இல்லாமல் அணு உலை உஷ்ணம் கொடுக்கத் தொடங்கும் நிலை அடைந்ததும் திடீரென அது வேலை செய்யத் தொடங்கி விடாதபடி காப்பதற்கு இந்தக் காட்மியக் கம்பிகள் பயன்பட்டன.

இந்த அணு உலை அடுக்கினுள், நியூட்ரான் உற்பத்தி நிகழ்வதைக் கண்டுபிடிப்பதற்குரிய கருவிகளும் அருகில் பொருத்தப்பட்டன. கிராபைட்டு அடுக்குகளை ஒவ்வொன்றாக அடுக்க அடுக்க, காட்மியக் கம்பிகள் இடைக்கிடையே கவனமாக வெளியே இழுக்கப்பட்டன. இவற்றை முழுவதும் இழுத்துவிட்டால், உள்ளே நடக்கும் நியூட்ரான் உற்பத்தியின் வேகம் அனைத்தையும் கருவிகளில் கண்டுவிடலாம்.

நியூட்ரான் உற்பத்தியால் மேலும் மேலும் அணுக்கள் உடைபட்டு உஷ்ணம் இடைவிடாமல் உண்டாகவேண்டும் என்பதே ஆராய்ச்சியின் நோக்கம். அதற்கு அணு உலை எந்த அளவு பெரிதாக இருக்கவேண்டும் என்று கண்டுபிடிக்கவே டாக்டர் பேர்மி இப்பரிசோதனையை நடத்தினார். அவர் நினைத்ததற்கு முன்பே, அணு உலை அடுக்கு தகுந்த அளவுக்கு விரைவில் வளர்ந்தது.

நியூட்ரான் உற்பத்தி மிக வேகமாக நடந்து வருகிறது என்று டிசம்பர் 1-ந் தேதி தெரியவந்தது. அன்று இரவு டாக்டர் பேர்மியும் அவருடைய துணைவர்களும் அணு உலையிலிருந்து காட்மியக் கம்பிகளை எடுத்துவிட்டால், அணு உலை தானாக வேலை செய்யத் தொடங்கி விடும் என்று கண்டனர்.

1942 டிசம்பர் 2-ம் நாள் விடிந்தது; காலை 9-45 மணி; காட்மியக் கம்பிகள் சிலவற்றை வெளியே இழுத்து விடும்படி டாக்டர் பேர்மி சொன்னார். அருகிலிருந்தவர் எல்லோரும் நியூட்ரான் உற்பத்தியைக் காணும் கருவிகளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இக் கருவிகளின் முகப்பு கடிகாரம் போலத் தோன்றும்; கடிகார முள் போல அதில் ஒரு முள் உண்டு; நியூட்ரான் உற்பத்தி வேகத்துக்குத் தக்கபடி அது "கிளிக் கிளிக்" என்று அசையும். இன்னொரு கருவியும் பக்கத்தில் இருந்தது; அதில் ஒரு பேனா உண்டு; அது அணு அடுக்கினுள்ளேயுள்ள நியூட்ரான் உற்பத்தி வேகத்தை ஒரு காகிதத்தில் கோடிட்டுக் காட்டுவதாகும்; கோடு உயரப் போனால் அதிக நியூட்ரான்கள் ஒரே வேகமாய் உற்பத்தியாகின்றன என்று பொருள்.

நியூட்ரான் உற்பத்தி கட்டுக்கடங்காமல் போய் விடாதபடி காக்க, முக்கியமான காட்மியக் கம்பி ஒன்று செருகப்பட்டிருந்தது. அதனை வெளியே எடுத்துவிடும்படி டாக்டர் பேர்மி 10 மணி ஆனதும் சொன்னார். வின், என்பவர் அவ்வாறே செய்தார். இன்னொரு கம்பிக்கு அருகே ஜார்ஜ் வெய்ல் என்பவர் நின்றார். அக்கம்பி, அணு உலை அடுக்கினுள்ளே எத்தனை அடி எத்தனை அங்குலம் இருக்கிறது என்று அறியுமாறு வரையிடப்பட்டிருந்தது.

நியூட்ரான் உற்பத்தி வேகத்தைக் காட்டும் கருவிகளின் 'கிளிக் கிளிக்' என்ற சத்தம் அதிகமாயிற்று; காகிதத்தில் வரையும் கோடும் உயர்ந்தது; ஆனால், சத்தம் ஒன்றுபோல் இல்லை; விரைவில், சத்தம் குறைந்து விட்டது; கோடும் படுக்கைக் கோடாகிவிட்டது. அணு உலை இன்னும் தானே இயங்கக் கூடியதாக வளரவில்லை

ஜார்ஜ் வெய்ல் வைத்திருந்த காட்மியக் கம்பி அதன்பின் பன்முறை சிறிது சிறிதாக உயர்த்தப்பட்டது. ஒவ்வொரு முறையும் நியூட்ரான் உற்பத்தி வேகம் உயர்ந்தது. ஆனால், விரைவில் அது தணிந்துவிட்டது. நண்பகல் ஆனதும் டாக்டர் பேர்மி, 'பசிக்கிறது; சாப்பிடப் போகலாம்' எனத் திடீரெனக் கூறினார்.

கூட வேலை செய்பவர்களுக்கு அலுப்புத் தட்டக்கூடாது என்பதை அவர் உணர்ந்தார் போலும். சாப்பாட்டு வேளையில் அவர் அதிகம் பேசவில்லை. எப்போதுமே அதிகம் பேசாதவர் அவர். அன்று அவர் அதிக மௌனமாக இருந்தார்.

இரண்டு மணிக்கு மீண்டும் ஆராய்ச்சிக் களத்தை நோக்கி அவர்கள் நடந்தார்கள். இருபது நிமிடம் கழித்து, 'உம், சரி,' என்றார் டாக்டர் பேர்மி; குறித்த அளவு ஜார்ஜ் வெய்ல் காட்மியக் கம்பியை வெளியே இழுத்தார். அருகில் நின்றவர் எல்லோரும் ஆவலாய்க் கவனிப்பதும், கருவிகளிலிருந்து நியூட்ரான் உற்பத்தி வேகத்தை டாக்டர் பேர்மி கணிப்பது வரைக் காத்திருப்பதுமாக இருந்தார்கள்.

"இப்பொழுது நடந்து விடும்: இனிமேல் அணு உலை தானே இயங்கும்; கோடு உயர்ந்து கொண்டே போகும்; இறங்காது" என்றார், டாக்டர் பேர்மி, அருகிலிருந்த டாக்டர் ஆர்தர் காம்டனிடம்.

டாக்டர் பேர்மி, நியூட்ரான் உற்பத்தி வேகத்தைக் கணக்கிட்டார்; ஒன்றும் பேசாமல் வேகமாக மாறி மாறிக் கணக்குகள் போட்டார்.

அவருக்குப் பின்புறம் நின்றவர்கள் உன்னிப் பார்த்தார்கள்; புது யுகம் பிறக்கப் போவதை ஒரு விநாடியும் தப்பாமல் காணவேண்டுமென்று ஒரே ஆர்வம், அவர்களுக்கு! நியூட்ரான் வேகம் காட்டும் கருவிகள் இரையத் தொடங்கின. அமைதியாய் டாக்டர் பேர்மி கணக்குப் போட்டுக்கொண்டிருந்தார்.

சரியாக 3-25 மணிக்கு, டாக்டர் பேர்மி, "அணு உலை, தானே இயங்குகிறது" என்றார்.

1942 டிசம்பர் 2, பிற்பகல் 3-25 மணியை, அனேக விஞ்ஞானிகள், 'அணு யுகத்தின் தொடக்கம்,' எனக் கருதுகிறார்கள்.

இவ்வாறு அணு உலை 28 நிமிட நேரம் வேலை செய்யவிடப்பட்டது. பிறகு காட்மியக் கம்பிகள் உள்ளே செருகப்பட்டன.

---

# சிறப்புக் கூட்டம்

★

**3-12-54** வெள்ளி மாலை **6** மணிக்கு

கோகலே மண்டபத்தில்

(அரமனைக்காரன் தெரு, சென்னை)

தோழர் **அ. பொன்னம்பலனார்**

அவர்கள் தலைமையில்

தோழர் இரா. நெடுஞ்செழியன்

அவர்கள்

## "ஆகும் நெறி எது? ஆகா நெறி எது?"

என்னும் பொருள் பற்றி பேசுவார்

நன்கொடை அணா 8, 4

—தோழமைக் கழகம், சென்னை.

---

# மதுரை மாவட்ட தி.மு.க. 2-வது மாநாடு

**வரவேற்புக் குழுக் கூட்டம்**

"4—12—54 பகல் 3 மணிக்கு மதுரை, 8, பந்தடி 1-வது தெரு, (திருமலை நாயக்கர் மஹாலுக்கு அருகில்) மாநாட்டு அலுவலகத்தில் மதுரை மாவட்ட தி. மு. கழக இரண்டாவது மாநாட்டு வரவேற்புக் குழுக் கூட்டம், தலைமைக் கழகச் செயற் குழு உறுப்பினர் தோழர் என். வி. நடராசன் அவர்கள் முன்னிலையில் நடைபெறும்," என, மாநாட்டுச் செயலாளர் தோழர் எம். அய்யாசாமி அறிவிக்கிறார்.

---

# பண்டிதரின் மிரட்டலுக்குப் பதில்!

'பாங்கிஊழியர் போராடியே தீருவர்'

சங்கச் செயலாளர் அறிவிப்பு

"அகில இந்தியாவிலுமுள்ள பாங்கி ஊழியர்கள் டிசம்பர் 10-ந் தேதி முதல் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது என்ற முடிவை மாற்றிக்கொள்ளப் போவதில்லை,"

என்று, அகில - இந்திய பாங்கி ஊழியர் சங்கத்தின் பொதுச் செயலாளரான பிரபாத்கார் கூறியிருக்கிறார்.

மேலும் அவர், "பாங்கு ஊழியர் பிரச்சினையில் அரசாங்கம் நீதி காட்ட மறுக்கிறது; அந்த நீதியைப் பெற நேரடியாகப் போராடித்தான் ஆக வேண்டியிருக்கிறது," என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

"பண்டித நேரு டில்லியில் பேசும்போது, 'பாங்கி ஊழியர் வேலை நிறுத்தத்தை, கம்யூனிஸ்டுகள் தூண்டிவிட்டுள்ளனர்,' என்று கூறியுள்ளதை நான் மறுக்கிறேன்; எங்கள் சங்கம் எந்த அரசியல் கட்சியினருக்கும் கட்டுப்பட்டது அல்ல; அந்தச் சங்கத்தின் முடிவுகள் எந்தவித அரசியல் உள்நோக்கத்தாலும் இயக்கப்பட்டு, மேற்கொள்ளப்பட்டது அல்ல; வேலை நிறுத்தம் செய்வது என்ற முடிவு இந்தியாவெங்கணுமுள்ள பாங்கி ஊழியர்களால் ஏகமனதாக மேற்கொள்ளப்பட்டதாகும்; நாங்கள் போராட்டம் நடத்துவது, அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்காக அல்ல; மாறாக, எந்த ஊழியரும் ஒத்துக்கொள்ள இயலாத வகையில், அநியாயமாக பாங்கி ஊழியர்களின் சம்பளத்தில் 'வெட்டு' செய்யப்படுவதை எதிர்த்தே நாங்கள் போராட்டம் நடத்துகிறோம்," எனவும் குறிப்பிட்டுள்ளார்.

---

# செய்திப் பட மசோதா

அங்கீகரிக்கப்பட்ட படங்களைத் திரையிட சென்னை அரசாங்கத்தின் புதிய முயற்சி

சென்னை, டிச. 1—

அங்கீகரிக்கப்பட்ட செய்திப் படங்களை சினிமாத் தியேட்டர்களில் கட்டாயம் காட்டவேண்டும் எனும் நிபந்தனையின் மீதுதான் தியேட்டர்களுக்கு 'லைசென்சு' வழங்கப்படும் என்றும் அவ்விதம் அங்கீகரிக்கப்பட்ட படங்களைத் திரையிடும் நேரம் 30 நிமிடங்களுக்கு அதிகமாகக் கூடாதென்றும் கட்டுப்படுத்துகிறதுமான அம்சங்களைக் கொண்ட மசோதா ஒன்றை சட்டசபையின் இந்தக் கூட்டத்திலேயே கொண்டு வரப்படும் என்று நிதி மந்திரி சுப்ரமணியம் அறிவித்திருக்கிறார்.

இந்த மசோதா நேற்று நடைபெற்ற மந்திரி சபைக் கூட்டத்தில் பூர்த்தியாயிற்று எனவும் இம் மசோதா பற்றி நீண்ட நாட்களாகவே யோசித்து வந்ததாயும் அமைச்சர் மந்திரியார் பத்திரிகையாளரிடம் கூறியிருக்கிறார்.

செய்திப் படங்களை சினிமா தியேட்டர்களில் திரையிடுவது சம்பந்தமாகச் சமீபத்தில் தலைமை உயர்நீதி மன்றம் அளித்த தீர்ப்பை ஒட்டியே இம்மசோதா முக்கியமாகக் கொண்டுவரப்படுவதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிட்டப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.

